POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO. G. 6. TN. MS. C. P. P. 55 ANNA Leading Progressive Tamil Daily of the People

# மேலவைத்தேர்தல்:ஓட்டுப்பதிவு

Regd. No. TN . MS (C) 244 Phone: 420212 4 பக்கம் விலை 60 காசு

அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

மலர் 10] சென்னை 23-3-1986 ஞாயிறு -:- வெளியூர் 24-3-1986 திங்கள் [இதழ் 152

# நிலவரம்

## சென்னை, மதுரையில் பெண்கள் ஆர்வத்துடன் ஓட்டளித்தனர்

**சென்னை, மார்ச் 23- மேலவைத் தேர்தல் ஓட்டுப்பதிவு இன்று நடந்தது.சென்னை, மதுரையில் ஓட்டுப்பதிவு விறுவிறுப்பாக இருந்தது. பெண்கள் ஆர்வத்துடன் ஓட்டளித்தனர்,**

தமிழகசட்டமேலவைக்கு 4 புதிய உறுப்பினர்களைத் தேர்நதெடுக்க ஆசிரியர்கள். -பட்டதாரி தொகுதிகளில் இன்று வாக்குபதிவு நடைபெற்றது.

இத்தேர்தலில் ஆசிரியர்களும் பட்டதாரிகளும் வாக்குப் போட்டனர்.

இதில் சென்னை— செங்கற்பட்டு மாவட்டங்களில் உள்ள ஆசிரியர்கள் வாக்குப் போட்டனர்.

இங்கு போட்டியிட்டவர்கள் விவரம் வருமாறு:-

1. செல்வி லீலாவதி (கழகம்)
2. ஏ.ஆர். ஜனகன் (தி.மு.க.)
3. இரா. கணேசன்
4. எஸ். சபாநாயகம்
5. எஸ். சுப்பிரமணியம்
6. வி. நாராயணசாமி
7. மானக்சந்த்நகார்
8. ஏ. மாயவன்
9. வீரா. கோவிந்தராஜன்

ஆகியோர் போட்டியிடுகின்றனர்.

இங்கு மொத்தம் 15.130 வாக்காளர்கள் உள்ளனர். மெத்தம் 120 வாக்குச் சாவடிகள் அமைக்கப்பட்டுள்ளன,

இந்த வாக்குப் பதிவின் எண்ணிக்கை நாளைகாலை 9 மணிக்கு காஞ்சிபுரம் மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகத்தில் தொடங்குகிறது.

### மதுரை

மதுரை.அண்ணா, இராமநாதபுரம், காமராசர், பசும்பொன் முத்துராமலிங்கம் ஆகிய மாவட்டங்களுக்கான ஆசிரியர் தொகுதியில் கீழ்கண்டவர்கள் போட்டியிட்டனர்.

1, பி.ஆர். தாமஸ்,
2. என்.வேம்பு,
3. வி.சிங்கராயர்,
4. ஐ.சேதுராமலிங்கம்,
5. பி,பார்தசாரதி,
6, வி, பி. பால்பாண்டித்துரை,

ஆகியோர் போட்டியிட்டனர்.

இங்கு மொத்தம் 14916 வாக்காளர்கள் உள்ளனர் 103 வாக்குச் சாவடிகள் அமைக்கப்பட்டுள்ளன நாளைபிற்பகல் 2 மணிக்கு இராமநாதபுரம் சுவர்ட்ஸ் மேல்நிலைப் பள்ளியில் வாககு எண்ணிக்கை துவங்குகிறது.

### மேற்கு மத்திய பட்டதாரி தொகுதி

தமிழ்நாடு மேற்குமத்திய பட்டதாரி தொகுதியில் கோவை, நீலகிரி, சேலம், தர்மபுரி, பெரியார் மாவட்டங்கள் அடங்கியுள்ளன இந்த மாவட்டங்களில் உள்ள பட்டதாரிகள்வாக்கு பதிவு செய்தனர்.

இந்த தொகுதியில்:-

1. இரா. ஜனார்த்தனம் (கழகம்)
2. கே. எம். தண்டபாணி (திமுக)
3. டி. வி. அங்கப்பன்
4. எஸ். எஸ். ராஜகோபாலன்
5. எஸ். சுதர்சனம்
6. டி. எஸ். செந்தில் ஆறுமுகம்
7. ஜி. ஆர் மாரியப்பன்
8. டாக்டர் கே. பி. முத்துசாமி

ஆகியோர் போட்டியிட்டனர்.

இந்த தொகுதியில் 48,826 வாக்காளர்கள் உள்ளனர். மொத்தம் 180 வாக்குச் சாவடிகள் அமைக்கப்பட்டுள்ளன.

நாளை பகல் 2மணிக்கு கோவை மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகத்தில் வாக்கு எண்ணிக்கை நடைபெறுகிறது

### கிழக்கு மத்திய பட்டதாரி தொகுதி

தமிழ்நாடு கிழக்குமத்திய பட்டதாரி தொகுதியில் தஞ்சை, புதுக்கோட்டை, திருச்சி ஆகிய மாவட்டங்கள் அடங்கியுள்ளன.

இங்கு போட்டியிட்டவர்கள் விவரம் வருமாறு:-

1. ஆர் சாமிநாதன் (கழகம்)
2. எல்.கணேசன் (தி.மு க)
3. டாக்டர் சிவகண்ணு
4, எம். சீனிவாசன்
5. எஸ். ராஜாபாதர்
6. ராஜ மகேந்திரன்

இந்ததொகுதியில் 31 212 வாக்காளர்கள் உள்ளனர். இவர்களுக்காக 168 வாக்குச் சாவடிகள் அமைக்கப்பட்டுள்ளன.

நாளை காலை 11 மணிக்கு தஞ்சை மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகத்தில் வாக்குஎண்ணிக்கை நடைபெறுகிறது.

எல்லா தொகுதிகளிலும் இன்று காலை 8மணிக்கு வாக்குப்பதிவ துவங்கியது. மாலை 4மணிவரை வாக்குப்பதிவு நடைபெற்றது.

வெற்றி பெற்றவர்கள் ஏப்ரல் 21ந்தேதி முதல் மேலவை உறுப்பினர்களாவர்.

ஓட்டுப் பதிவு ஆரம்பத்தில் மந்தமாக இருந்தது.

கோவை.பட்டதாரிஆசிரியர் தொகுதியில் முற்பகல் 11மணிவரை 15 சதவீத ஓட்டுக்களே பதிவுஆனதாகத் தகவல் கிடைத்துள்ளது.

மதுரையில் 11 மணிவரை 35 சதவீத ஒட்டுகளும் தஞ்சையில் 20 சதவீத ஒட்டுகளும், செங்கற்பட்டில் 20 சதவீத ஓட்டுகளும் பதிவானதாகதகவல் கிடைத்துள்ளது.

### லீலாவதி வெற்றி வாய்ப்பு

சென்னையில் ஓட்டுப்பதிவு நிலைமையை கழக தேர்தல் பொறுப்பாளர் முன்னாள் அமைச்சர் ராஜாமுகமது சுற்றிப் பார்த்தார்.

சென்னையை பொறுத்தவரை மேலவை தொகுதி ஆசிரியர் வாக்காளர்களில் மூன்றில் இரு பகுதியினர் பெண்கள் அவர்கள் ஆர்வத்துடன் வந்து ஓட்டளித்தனர். கழக வேட்பாளர் செல்வி லீலாவதிக்கு நல்ல வெற்றி வாய்ப்பு உள்ளது என்று ராஜாமுகமது தெரிவித்தார்,

### பகல் 12-30 மணி நிலவரம்

பகல் 12-30 மணிவரை மதுரையில் 45 சதவீத ஓட்டும். காமராசர் மாவட்டத்தில் 35 சதவீத ஓட்டுகளும், பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டத்தில் 25 சதவீத ஓட்டுகளும், ராமநாதபுரம் மாவட்டத்தில் 30 சதவீத ஓட்டுகளும் பதிவாயின.

சென்னை செங்கற்பட்டில் 40 சதவீதம் ஓட்டுக்கள் பதிவாயின:

சேலம்- நீலகிரி பகுதியில் 25 சதவீத ஓட்டுகளும் கோவையில் 40 சதவீத ஓட்டுக்களும் தஞ்சை- புதுக்கோட்டை மாவட்டங்களில் 35 சதவீத ஓட்டுகளும் பதிவானதாக தகவல் கிடைததுள்ளது.

சென்னை, கோவை, மதுரை ஆகிய மாவட்டங்களில் பிற்பகல் 3மணிக்குள் 60 சதவீதம் ஓட்டுக்கள் பதிவாகும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.




## ஆகஸ்டில் இந்தியாவின் புதிய ராக்கெட்

திருவனந்தபுரம், மார்ச. 23—இந்திய விண்வெளிக் கலம் (ஏ. எஸ். எல். வி இந்த மாதம் இறுதியிலோ அல்லது ஏப்ரல் மாதம் தொடக்கததிலோ வானில் செலுத்துவதாக இருந்த திட்டம இப்போது கைவிடப்படடுள்ளது.

இந்தப் புதிய விண்வெளி கலம் அநேகமாக இந்த ஆண்டு ஆகஸ்ட்டு மாதவாக்கில் விண்ணில் செலுத்தப்படும்.

ஸ்ரீஹரிகோட்டாவில் இருந்து இந்தப் புதிய ராக்கெட் வானில் செலுத்தப்படும் என்று தெரிகிறது

150 கிலோகிராம் எடையுள்ளவிண்வெளிக்கலத்தை இந்த ராக்கெட் தாங்கிச செல்லும்.

இந்தியாவின் முதல் விண்வெளிக் கலம் எஸ்.எல.வி 3 40 கிலோ கிராம் எடையுள்ளது என்பது தெரிந்ததே.

## ரீகனின் தூதர் டெல்லிக்கு 'திடீர்' வருகை

புதுடெல்லி.மார்ச்23—போதை மருந்துகள்பயங்கரவாதிகள் நடமாட்டத்தை தடுத்து நிறுத்துவது பற்றிபேச்சுவார்த்தை நடத்த அமெரிக்கஅட்டார்னி ஜெனரல் புதுடெல்லி வந்துள்ளார் பிரதமர் மற்றும் அமைச்சர்களை அவர்சந்தித்துப் பேசுவார்.

உலகநாடுகளுக்கிடையே போதை மருந்து கடத்தல் பெருகி வருகிறது. பயங்கரவாதிகளும் ஒரு நாட்டில் இருந்து மற்றொரு நாட்டிற்குள் சென்று ஆட்சேபகரமான நடவடிக்கைகளில் ஈடுபட்டுவருகிறார்கள் உள்நாட்டு குழப்பத்தையும் இந்த பயங்கரவாதிகள் ஏற்படுத்துகிறார்கள்.

சீக்கிய பயங்கரவாதிகளும் இந்தியாவில்இருந்து. வெளியேறி அமெரிக்கா, கனடா, இங்கிலாந்து முதலிய நாடுகளில் தங்கி இந்தியாவுக்த விரோதமான நடவடிக்கைகளில்ஈடுபட்டு வருகிறார்கள்.

இதுகுறித்து சம்பந்தப்பட்ட நாடுகள் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று பிரதமர் ராஜீவ்காந்தியும் வலியுறுத்தி வருகிறார்.

போதை மருந்துகளின் நடமாட்டத்தை தடுத்து நிறுத்துவதற்கு உலக நாடுகள் தீவிர கவனம் செலுத்த வேண்டும் என்றும் பிரதமர் ராஜீவ் வற்புறுத்தியுள்ளார்.

இதைத் தொடர்ந்து அமெரிக்க அரசு தலைமை வழக்கறிஞர் எட்வின் மீஸ் தலைமையில் 16 போ கொண்ட குழு நேற்று புதுடெல்லி வநதுள்ளது.

வழக்கறிஞர் எட்வின் மீஸ் அமெரிக்க ஜனாதிபதி ரீகனுக்கு நெருங்கிய நண்பரும் நம்பிக்கைக்குப் பாத்திரமானவரும்ஆவார். எட்வின் மீஸ் புதுடெல்லியில் பிரதமர் ராஜீவ்காந்தி மத்திய நிதி அமைச்சர் வி பி சிங் வெளிவிவகார அமைச்சர் பி,ஆர். பகத் மற்றும் சட்ட அமைச்சர் அசோக்சென் ஆகியோரை சந்தித்துப் பேசுகிறார்

போதை மருந்துகள் நடமாட்டம். பயங்கரவாதிகளின் தேசவிரோத நடவடிக்கைகள் ஆகியவற்றை தடுப்பது குறித்து அவர் ஆலோசனை நடத்துவார்.

அமெரிக்கா- இந்தியா ஆகிய இருநாடுகள்சம்பந்தப்பட்ட பல்வேறு விவகாரங்கள் குறித்தும் எட்வின் மீஸ் தலைமையிலான குழுவினர் ஆலோசனை நடத்துவார்கள்.

பயங்கரவாதிகளின் கொட்டத்தை இந்தியாவிலும், அமெரிககாவிலும் அடியோடு ஒழித்துக் கட்டுவதற்கான நடவடிக்கைகளை இரு நாடுகளும் மேற்கொள்வது பற்றியும் அவர்கள் முடிவு செய்வார்கள்.

எட்வின்மீஸ் தலைமையிலான குழுவினர் 3 நாடகள் புதுடெல்லியில் தங்கிப் பேசுவார்கள்.

தாய்லாந்து பர்மா, பாகிஸ்தான் முதலிய நாடுகளுக்கும் இந்தக்குழு செல்லும்.

## நடுவானில் பறந்த விமானத்தைக் காணோம்: 20 பேர் கதி என்ன?

புதுடெல்லி மார்ச் 23 ஜம்மு-காஷ்மீர்பகுதியில் நடுவானில் பறந்து கொண்டிருந்த விமானப் படைவிமானம் ஒன்று காணாமல் போய் விட்டது அதில் இருந்த 20 போகளின் கதி என்ன ஆயிற்று என்று தெரியவில்லை.

ஜம்மு-காஷ்மீர் பகுதியில் இருந்து விமானப் படையைச் சேர்ந்த விமானம் ஒன்று நேற்று காலை லடாக் பகுதிக்கு கிளம்பியது சுமார் காலை 7.45க்கு இந்த விமானம் 20போகளுடன் புறப்பட்டது

அங்கு 20 பேர்களில் 3 பேர் விய லஓ டிகள் அது பறந்து கொண்டிருந்த போதே சிறிது நேரத்தில் ஜம்முவில் உள்ள கட்டுப்பாட்டு அறையின் தகவல் தொடர்பை இழந்துவிட்டது.

மீண்டும் தொடர்பு கொள்ள கட்டுப்பாட்டு அறை மேற்கொண்ட முயற்சிகளும் தோல்வி அடைந்தன.

அந்த விமானத்துக்கு என்ன நேர்ந்தது? அதில் பயணம் செய்து கொண்டிருந்த 20 பேர்களும் என்ன ஆனார்கள் என்று தெரியவில்லை

ஜம்மு – பதன் கோடு

கடைசி தகவல் கூறுகிறது. பருவநிலை மிகவும் மோசமாக இருப்பதாக அவர் கூறியிருந்தார்.

கட்டுப்பாட்டு அறையுடன் இருந்த தொடர்பை இழப்பதமகுச் சறறு நேரத்துககு முன்பு இந்தத் தகவலை விமான ஓட்டி கொடுத்திருந்தார். ஆனால் அதற்குப் பிறகு தொடர்பை இழந்து விட்டார்.

காணாமற் போன விமானத்தைத்தேடிப்பிடிபபதில் ராணுவ அதிகாரிகள் மும்முரமாக ஈடுபட்டனர்.

ஹெலிகாப்டர் விமானங்களும் தீவிரமாக ஈடுபடடுள்ளன.

## இலங்கை அரசு ராணுவத்திற்கு மேலும் 100கோடிஒதுக்குகிறது

கொழும்பு, மார்ச் 23—இலங்கையில் ராணுவச் செலவுக்காக கூடுதலாக 100 கோடி ருபாய் ஒதுக்கீடு செய்யுமாறு அந்நாட்டு கருவூலத்திடம இலங்கை பாதுகாப்பு அமைச்சகம் கேட்டுக் கொண்டுள்ளது.

இச்செய்தி அரசின் கட்டுப்பாட்டிலுள்ள டெய்லி நியூஸ் என்றபத்திரிகையில் வெளியிடப்பட்டுள்ளது.

இந்த வாரம் பாதுகாப்புக்காக கூடுதலாக 25லட்ச ருபாய் ஒதுக்கப்பட்டுள்ளதாக கொழும்புவில் நடைபெற்ற விருந்து ஒன்றில் இலங்கைக்கு உதவியளிக்கும் நாடுகளின் தூதர்களிடம் நிதியமைச்சர் ரோனி டிமல்கூறியதாகவும் அந்தப் பத்திரிகையில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இலங்கையின் பாதுகாப்புக்காக 1978ம் ஆண்டு பட்ஜெட்டில் 56 கோடி ருபாய் ஒதுக்கப்பட்டது இந்த ஆண்டு 585 கோடியாக அது உயர்ந்துள்ளது எனினும் அதைவிட அதிகம் செலவழிககப்படுமென தெரிகிறது.

## மூளை நரம்புகளை மாற்றும் சிகிச்சை

சென்னை, மார்ச் 23- மூளைத் திசுக்களை நரம்புகளை மாற்றுவதற்கான ஆராய்ச்சிகளை தரமணியிலுள்ள மருத்துவ விஞ்ஞான ஆய்வு கூடம் மேற்கொண்டு வருகிறது.

தலையில் காயம்பட்டவர்களுக்கும். பக்கவாத நோய் ஏற்பட்டவாகளுச்கும் இந்த வித சிகிச்சையின் மூலம் குணப்படுத்துவதற்காக இந்த ஆராய்ச்சி மேற்கொள்ளப்படுகிறது.

இந்த திசு மாற்றும் ஆராய்ச்சிக்கான அனுமதியை மத்திய விஞ்ஞான தொழில் நுட்ப இலாகாவிடமிருந்து எதிர்பார்த்திருப்பதாக அங்குள்ள பேராசிரியர் ஏ. ஏ. கிருஷ்ணமூர்த்தி கூறினார்.

மூளையில் கட்டி ஏற்படுவதையும் அதன் மூலம் உடலின் ஒரு பகுதி செயலிழந்து போவதையும் தடுக்க இந்த திசுமாற்று சிகிச்சை பலன்தருமென்றும் கிருஷ்ணமூர்த்தி கூறினார்.

மூளையிலுள்ள திசுக்கள் நரம்புகள் போன்றவை பழுதுபட்டால் மேலும் அந்த பழுது அதிகரிக்காமல் மாற்று திசுக்களைப் பொருத்தி குணப்படுத்தும் திட்டம் இது.

இவ்வாறு பாதிக்கப்படுகிறவர்களுக்கு கை, கால்கள் செயல்படாமல் போவதுடன்கண்பார்வை இழப்பு காது கேட்கும் சக்தி இழப்பு ஆகியவையும் ஏற்படுகிறது. இந்தப் பதிய ஆராய்ச்சி மூலம் இந்நிலையை தடுக்க வழி ஏற்படும்.

ஒருமனிதனின்மூளையை முற்றிலுமாக மாற்றுவது மருத்துவத்தின் அடிப்படையில் சாத்தியம் தான் என்றாலும் அது எவ்வாறு செயல்படும். அதனால் பலன் ஏற்படுமா என்கிற அய்யம் மருத்துவத்துறையில் உள்ளது

திசுக்களையும், நரம்புகளையும் மாற்றுவது பற்றிய பூர்வாங்க ஆராய்ச்சி ஏற்கனவே நடந்து வருவதாக கிருஷ்ணமூர்த்தி தெரிவித்தார்.

ஒரு மூளை நரம்பு கெட்டுவிட்டால் அதற்கு பதிலாக நல்ல நிலையிலுள்ள திசுநரம்பு ஆகியவற்றை தேர்ந்தெடுத்து பொருத்துவது மிகவும் சிக்கலானது என்றும் அவர் கூறினார,

சுவீடனில் இதுபோன்ற நரம்புமாற்றுசிகிச்சை நடந்திருப்பதாகவும் ஆனால் சிகிச்சை முடிவு அறிவிக்கப்படவில்லை என்றும் மருத்துவ துறையினர் கூறினார்கள்.

மூளை நரம்பு மாற்று சிகிச்சை என்பது சிறுநீரக மாற்று சிகிச்சையைவிட கடினமானது. ஏனெனில் அந்த திசுக்கள் இறந்துவிட்டால் அவற்றை மீண்டும் செயல்படவைப்பது முடியாதது என்றும் கிருஷ்ணமூர்த்தி கூறினார்.

குரங்குகளை வைத்து இநத ஆராய்ச்சி மேலும் தொடர்ந்துமேற்கொள்ளப்படுவதாகவும் அவர் கூறினார்.

## புதுவையில் தீவிபத்தில் வீடு இழந்தோர்க்கு அரசு உதவி

பாண்டிசசேரி, மார்ச 23- பாண்டிச்சேரியில் ஏற்பட்ட தீவிபத்தில் 125 பேர் வீடு இழந்தனர் அவர்களுக்கு தலா 1500 ரூபாயை புதுவை முதல்வர் பருக் மரக்காயர் வழங்கினார் ஒருபகுதி வீடு பாதிக்கப்பட்ட நிலையில் உள்ள 31 குடும்பங்களுக்கு தலா ரூபாய் 500 வழங்கப்பட்டது.



## தேவை

அரசியலில் ஈடுபட்டோர்க்கு ஊக்கம், விழிப்புணர்வு, சோர்வின்மை எப்பொழுதும் தேவையாகும்,

— பேரறிஞர் அண்ணா



## நலம்

தன்நலம் வேண்டாமென்று கூறவில்லை, அதனுடன் சமுதாய நலனையும் கருதிப் பார்க்க வேண்டும்.

— தந்தை பெரியார்

## நிர்வாகிகள் தேர்வு

சென்னை, மார்ச் 23- தமிழ்நாடு நுகர்பொருள் வாணிப கழக அண்ணா தொழிலாளர் சங்க சேலம் மண்டல பொது உறுப்பினர்கள் கூட்டம் பொதுச் செயலாளர் ஏழுமலை தலைமையில், அலுவலக செயலாளர் கணபதி முன்னிலையில் நடைபெற்றது. கூட்ட முடிவில் தலைவராக ஜெகன்நாதன், துணை தலைவர்களாக சுப்பராயன் ராஜமாணிக்கம், செயலாளர் நடராசன், பொருளாளர் பழனிசாமி, அலுவலக செயலாளர் முத்து சுப்பிரமணியம் கௌரவ ஆலோசகராக அங்கமுத்து எம்.எல்.சி ஆலோசகராக ராமானுஜம் மற்றும் அமைப்புச் செயலாளராக 4 பேரும், இணைச் செயலாளராக 4 பேரும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்

# காவிரி பிரச்னை தீர்வுக்கு டெல்லி உதவி அவசியம்

# ராமகிருஷ்ணன் பேச்சு

புதுடெல்லி, மார்ச் 23— காவிரி நீர் பங்கீட்டு பிரச்சினைக்கு தமிழகமும் கர்நாடகமும் சுமுகமான தீர்வு காண மைய அரசு ஆக்க பூர்வமாக உதவ வேண்டும் என்று ராஜ்ய சபையில் கழக உறுப்பினர் ஆர், ராமகிருஷ்ணன் கோரினார்.

பஞ்சாப் அரியானா மாநிலங்களுக்கு இடையே உள்ள தண்ணீர்பங்கீட்டு பிரச்சினைக்குத் தீர்வுகாண சுப்ரீம் கோர்ட் நீதிபதி இராடி தலைமையில் அமைக்கப்பட்ட ரவி பியாஸ் நதிநீர் பங்கீடு மசோதா மீது பேசுகையில் ஆர்ராம கிருஷ்ணன் கூறியதாவது:-

பஞ்சாப் பிரச்சினைக்குத் தீர்வுகாண பிரதமர் ராஜீவ் காந்தி மறைந்த அகாலி தலைவர் லோங்கோவாலுடன் ஒரு உடன்பாடு கண்டார். தொலைநோக்கோடு தீர்க்க தரிசனத்தோடு காணப்பட்ட இந்த உடன்பாட்டை அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம் வரவேற்றது. நாட்டின் ஒருமைப்பாட்டையும் ஒற்றுமையையும் காக்க எடுக்கப்பட்ட உறுதியான நடவடிக்கை தான் பஞ்சாப் உடன் பாடாகும்.

அந்த உடன்பாட்டின் ஒருஅம்சமான ரவி-பியாஸ் நதி நீர்பங்கீட்டுக்கு உடன்பாடு காண நடுவர் குழு அமைக்கப்படுகிறது.

பஞ்சாப்- அரியானா- ராஜஸ்தான் ஆகிய மூன்று மாநிலங்களும் ரவி-பியாஸ் நதி நீரைச் சுமுகமாகப் பங்கீடு செய்து கொள்ள இந்த நடுவர் குழு உதவும் என்று நம்புகிறோம் சுப்ரீம் கோர்ட் நீதிபதி தலைமையில் அமைக்கப்பட்ட இந்த நடுவர் குழு ஒரு நல்ல தீர்ப்பினை வழங்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

### புரட்சித் தலைவர் பாதை

பல்வேறு மாநிலங்கள் வழியாக ஓடும் நதிகளை தேசிய நதிகள் என்று அறிவிக்க வேண்டும் என்ற கொள்கையை தமிழக முதல்வர் புரட்சித்தலைவர் தொடர்ந்து வலியுறுத்தி வருகிறார்.இதனை மைய அரசு செயல்படுத்த முன்வரவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

பல்வேறு மாநிலங்கள் வழியாக ஓடும் நதிகளை தேசிய நதிகளாக்குவது நாட்டின் ஒற்றுமைக்கே உறுதுணையாக இருக்கும்

இந்த சந்தர்ப்பத்தில் காவிரிநீர் பங்கீட்டுப் பிரச்சினையைகுறிப்பிட விரும்புகிறேன் காவிரி நீர் பிரச்சினைக்குத் தீர்வுகாண தமிழகமுதல்வர் புரட்சித்தலைவர் தொடர்ந்து முயற்சித்து வருகிறார். அன்றைய கர்நாடகமுதல்வர் குண்டுராவுடன் பேசினார் இன்றைய முதல்வர் ஹெக்டேயுடனும் பேசினார.

காவிரிநீர் பங்கீடுசம்பந்தமாக அதிகாரிகள் மட்டத்தில் நடந்தபேச்சு வார்த்தையில் வேறுபாடுகள் குறைந்துள்ளன.

புரட்சித்தலைவர் எடுத்த முன் முயற்சியின் காரணமாக மேலும் வேறுபாடுகள் குறைந்திருக்கின்றன. எனவே இந்த சமயத்தில் மைய அரசு முன் முயற்சி எடுத்து காவிரி நீர் பங்கீட்டுப் பிரச்சினைக்கு சுமுகமாகத் தீர்வுகாண ஆக்க பூர்வமாக உதவ வேண்டும்.

காவிரிநீர் பங்கீடுசம்பந்தமாக 50 ஆண்டுகளுக்கு முன்பு ஏற்பட்ட ஒப்பந்தம் 1974-ம் ஆண்டுடன் முடிவடைந்தது ஆனாலும் அந்த ஒப்பந்தம் இன்றைக்கும் பொருத்தமாக இருக்கிறது என்று மத்திய சட்டத்துறையே கூறியிருப்பதை கவனத்தில் கொள்ள வேண்டுகிறேன்.

தமிழகத்தில் காவிரி நதி மீது நீர் மின்சார நிலையங்கள அமைப்பதைக்கூட கர்நாடக அரசு ஆட்சேபிக்கிறது. இது தவறான முன் உதாரணமாகும்

மத்திய பாசனத்துறை அமைச்சர் சங்கரானந்த் கர்நாடக மாநிலத்தைச்



சேர்ந்தவராக இருக்கலாம் என்றாலும் காவிரிநீர் பங்கீட்டுப் பிரச்சினைக்கு தமிழகத்தின் நலன்களையும் காக்கும் வகையில் சுமுகமான தீர்வு காண்பார் என்று நம்புகிறோம்.

இவ்வாறு ஆர். ராமகிருஷ்ணன் கூறினார்.

# 86 தொழிற்சாலைகளை தமிழகத்தில் அமைக்க அனுமதிக்காதது ஏன்?

## வலம்புரிஜான் கேள்வி

புதுடெல்லி, மார்ச் 23— தமிழ்நாட்டில் 86 தொழிற்சாலைகளை அமைக்க மத்திய அரசு அனுமதி அளிக்காதது ஏன் என்று மாநிலங்களவையில் வலம்புரி ஜான் கேட்டார்.

மாநிலங்களவையில் நிதி நிலை அறிக்கையின் மீது கழக உறுப்பினர் வலம்புரி ஜான் பேசுகையில் கூறியதாவது:

தமிழ்நாட்டைப் பொறுத்தவரை மின்சார உற்பத்திக்குத் தகுந்தநிலக்கரி கிடைக்கவில்லை. இந்த வகை நிலக்கரியை வெளி நாட்டில்இருந்து இறக்குமதி செய்ய மத்தியஅரசை அனுமதி கேட்டு தமிழக அரசு பலமுறை மன்றாடிப் பார்த்துவிட்டது இது வரை அனுமதி வழங்கப் படவில்லை.

இனிவருங்காலத்தில் அணுமின்நிலையத்தைமாத்திரமே தமிழ்நாடு நம்பியிருக்க வேண்டியசூழ்நிலையில். திருநெல்வேலி கூடங்குளம் அணுமின் நிலையத்தைத் தள்ளிப் போட்டுக் கொண்டே வருகிறது மத்திய அரசு. ஏன் இந்த மாற்றாந்தாய் மனப்பான்மை? ஆறாவது ஐந்தாண்டுத் திட்டத்திலேயே அனுதிமக்கப்பட்டிருக்க வேண்டிய கூடங்குளம் அனல் மின்நிலையம்இன்னமும் எட்டாத வானத்தில் கிட்டாதநிலவாகிக்கொண்டிருக்கிறதே எதற்காக?

### பாதுகாப்புக்கு ஏற்ற திட்டம்

சூயஸ்கால்வாய்.பனாமா கால்வாய்தொடங்கப்பட்ட போது திட்டமிடப்பட்ட சேது சமுத்திரம்கால்வாய் 125 ஆண்டுகளாக கிடப்பிலே போடப்பட்டிருக்கிறது. தமிழக முதல்வர் எத்தனை தட்வை இந்த சேதுசமுத்திரம் கால்வாய் திட்டத்திற்காக மத்தியஅரசை கேட்டுக் கொண்டிருக்கிறார்! எழுதியிருக்கிறார்! இருந்தும் மத்தியஅரசு அசைந்து கொடுக்காமல் இருப்பதற்கு என்ன காரணம்?

நிதிவசதி இல்லை என்று மத்திய அரசு காரணம் காட்டுகிறதே! இலங்கையில் தமிழினம் அழிந்து வருகிற நேரத்தில் நிதி வசதி இல்லை என்கிற காரணத்தைக் காட்டுகிற மத்திய அரசு. நமது தாயகத்தின் பாதுகாப்பிற்கு இந்தக்கால்வாய்த் திட்டம தவிர்க்க முடியாதது என்று அறியவில்லையா?

மேற்கு நோக்கி ஓடி அரபிக் கடலில் சேருகிற நதிகளால் 218 டி. எம். சி, தண்ணீர் ஆண்டுதோறும் வீணாகிறது. தமிழகத்தின் தென் மாவட்டங்களுக்குக் குடிநீர் வசதி செய்துதர 17 டி. எம். சி தண்ணீர் போதுமானது இருந்தும் மத்திய அரசு இந்தத் திட்டத்தை செயல்படுத்த தயங்குகிறது.

மூன்று ஆண்டுகளாக 86 தொழிற் சாலைகளுக்கு தமிழகத்தில் இருந்து அனுமதிகேட்டுமனுக்கள் மத்திய அரசிற்கு அனுப்பப்பட்டிருந்தும் இன்று வரை அனுமதி வழங்கப்படவில்லை

தமிழகத்தின் கோரிக்கைகள் தொடர்ந்து நிராகரிக்கப்பட்டு வருகின்றன நாங்கள் புண்பட்டிருக்கிறோம். வார்த்தைகளால் வெளிப்படுத்த முடியாத அளவிற்கு நாங்கள் காயப் படுத்தப்பட்டிருக்கிறோம்,

நீங்கள் கடலுக்குமேலே காணப்படுகிற நீர்க்குமிழிகளை மாத்திரம் பார்க்கிறீர்கள் நீருக்கடியில் நடமாடுகிற உணர்ச்சிக் கோளங்களைப் பார்க்க மறுக்கிறீர்கள்.

ஏழ்மையை விரட்டுகிற திட்டங்களுக்காக பட்ஜெட்டில் 65 சதவிகிதம் அதிக நிதி ஒதுக்கப்பட்டிருக்கிறது

திருத்தப்பட்ட பட்ஜெட் மறறும் ஏறி வரும் விலைவாசி இவைகளைக் கணக்கில் எடுத்தால், இந்தஅதிக நிதி 15 சதவிகிதம் கூட வராது.

### திட்டத்தின் பலன்

ஆறாவது 5 ஆண்டுத் திட்டத்தில் 1 கோடியே 65லட்சம் ஏழைகள் இந்தத் திட்டத்தால் பலன் அடைந்தாக அரசு தெரிவிக்கிறது இது உண்மை இல்லை பல்வேறு ஆய்வுகள் அறிக்கை தருகின்றன 4500 கோடி ரூபாயில் 500 கோடி ரூபாய் மாத்திரமே திட்டத்தின் பலன்களை எட்டியதாகக் கண்டு பிடிக்கப்பட்டிருகிறது.

5 பேர்கள் உள்ள குடும்பமே இந்தத் திட்டத்தின் கீழ் பலன் பெறுகிற தகுதி உடையது என்றால் ஏழைகள் எழுந்து நடக்க வலிவற்றவர்களை திட்டத்தின் பலன் சென்று சேராது என்பது தெளிவாகிவிடுகிறது அல்லவா? இந்த நிலையை மாற்ற உடனே அரசு தீவிர நடவடிக்கை மேற்கொள்ளவேண்டும்.

சமுதாயத்தில் வலிவற்றவர்களுக்கு தள்ளுபடிக் கடன் திட்டம் ஒன்றை அரசு அறிமுகப்படுத்தியிருக்கிறது. இதில் மீனவர்களுக்கு மாத்திரம் இடமில்லை. இயற்கையின் கரங்களில் விதியை நம்பி விளையாடுகிற இந்த மக்களை அரசு மறக்கலாமா? அவர்களை உடனே இந்தத் திட்டத்தில் இடம் பெறச் செய்ய வேண்டும்

விவசாயிகளுக்குத் தகுந்த விலைதந்து, அவ்வகை விலை பொதுவான அத்யாவசியப் பண்டங்களின் விலையை ஏற்றி விடாமல் ஒரு கொள்கையை அரசு ஏன இதுவரை உருவாக்கவில்லை?

12 ஆண்டுகளாக தானிய களஞ்சியமான தஞ்சை வறட்சியால் வாடுகிறதே? மத்திய அரசு அதற்காக என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது? உணவு உற்பத்தி அதிகமாக வேண்டுமென்றால்: தஞ்சைக்கு அரசு தயாளம் காட்ட வேண்டாமா?

இவ்வாறு வலம்புரி ஜான் பேசினார்.



## தீ விபத்து: என்.வி.என். செல்வம் ஆறுதல்

சென்னை, மார்ச் 23 சென்னை பூங்காநகர்பகுதி சுந்தரபுரம் குடிசை பகுதியில் திடீரென்று தீவிபத்து ஏற்பட்டு 100க்கும் மேற்பட்ட குடிசைகள் விபத்தில்பாதிக்கப்பட்டன. இப்பகுதியை குடிசை மாற்றுவாரியத் தலைவர் என். வி. என் செல்வம் சென்று பார்வையிட்டார். பாதிககப்பட்ட குடும்பங்களுக்கு ஆறுதல் கூறினார். உடனடி நிவாரணங்களுக்கு ஏற்பாடுகளை செய்தார் தீவிபத்தில் காயமடைந்தவாகளுக்குதீவிர சிகிச்சை அளிக்குமாறு மருத்துவர்களை கேட்டுக்கொண்டார்

# கிராம மக்களுக்கு கோழி பண்ணை அமைக்க அரசு உதவி

## கே. ஆர். ஆர். கல்யாணி தகவல்

மதுரை, மார்ச் 23— கிராமமக்களுக்குகோழிப் பண்ணை அமைக்க அரசு உதவி அளிக்கிறது என்று கோழி இன வளர்சசி தலைவர் கே ஆர். ஆர கல்யாணி கூறினார்.

தமிழ்நாடு கோழியின வளர்ச்சி கழகத்தின் சார்பில் காமராசர் மாவட்டப் காரியாபட்டியில்வறட்சிக்கு இலக்காகும் பகுதிதிட்டத்தின் கீழ் கோழி வளர்ச்சி திட்டங்களின் தொடக்க விழா நடைபெற்றது



### அமைச்சர்கள்

தமிழ்நாடு கோழியின வளர்ச்சிக் கழகத்தின் தலைவர் கே. ஆர். ஆர் கல்யாணி முன்னிலையில் தொழிலாளா நலத்துறை அமைச்சர் கே ஏ கே கோழிவளர்ப்புப் பண்ணைகளில் அடிக்கல்லை நாட்டினார்.

கூட்டுறவுத்துறை அமைச்சர் கே கே. எஸ் எஸ் ஆர் ராமச்சந்திரன் காரியாப்பட்டியில் அமையவிருக்கும் கோழி வளர்ப்பு செயல் முறை விளக்கப் பண்ணையில் அடிக்கல்லை நாட்டினார்

இவ்விழாவில் தமிழ்நாடு கோழியின வளர்ச்சிக் கழகத்தின் தலைவர் கே ஆர். ஆர். கல்யாணி பேசுகையில் கூறியதாவது:-

முதல்வர் புரட்சித் தலைவர் பொறுப்பேற்ற பிறகுதான் கிராமங்களின் முன்னேற்றத்திற்காகவும் ஏழை எளிய மக்கள் ஆதி திராவிட மக்களின் வாழ்க்கைத் தரம் உயரவும் நாட்டின்வறுமையை ஒழிக்கவும்அரியபலதிட்டங்களை செயல் படுத்தி வருகிறார்.

ஏழை எளிய மக்களின் வருவாயை பெருக்கும் திட்டங்களில் தமிழ்நாடு கோழி இன வளர்ச்சிக் கழகம் மூலம் கிராமங்களில் 3098 கோழிப்பண்ணைகள் ஏற்படுத்தி ஏழை எளியமக்களுக்கு அரசின்மானியமாக இதுவரை ரூ 62 50 லட்சம் கொடுக்கப்பட்டுள்ளது

மேலும் ஆதிதிராவிட மக்களுக்காக சிறப்பு கூட்டமைப்பு திட்டத்தின் கீழ் பல மாவட்டங்களில் 350 பண்ணைகள் அமைக்கப்பட்டு அவர்களுக்கு 50 சதவீதம் மானியமாக இது வரை 7.70 லட்சம் வரை கொடுக்கப்பட்டுள்ளது.

தமிழகத்தில் வறட்சிக்கு இலக்கான பகுதியான இராமநாதபுரம். காமராசர் பசும்பொன் முத்துராமலிங்கம். தர்மபுரி, புதுக்கோட்டை, திருநெல்வேலி ஆகிய மாவட்டங்களில் வறட்சியின் கொடுமையை குறைக்க மத்திய அரசும் மாநில அரசும் உதவிகள் செய்வதன் மூலம் பல்வேறு திட்டங்களைசெயல்படுத்தி வருகிறது

இந்த ஆண்டு முதல் இந்த ஆறு மாவட்டங்களிலும் தமிழ்நாடு கோழி இன வளர்ச்சிக் கழகத்தின் மூலம் 50 லட்சம் செலவில் கோழி வளர்சசி திட்டங்களும் செயல் படுத்தப்பட இருக்கிறது.

காமராசர்மாவட்டத்தில் பின் தங்கிய பகுதிகளான காரியாப்பட்டி மற்றும் நரிக்குடி ஒன்றியங்களில் ரூபாய் 11. 40 லட்சச் செலவில் இத்திட்டப் செயல் படுத்தப்படுகிறது

### பண்ணையாளருக்கு பயிற்சி

முட்டையிடும் கோழிகளையும் இறைச்சிக்காகவே வளர்க்கும் கறிக் கோழிகளையும் வளர்ப்பதற்கு ஏழை எளிய மக்களும் தெரிந்து கொள்ள காரியாப்பட்டியில் ஆயிரம் முட்டையிடும் கோழிகளையும் 500 இறைச்சி கோழிகளையும் டாப்கோ நிறுவனமே வளர்த்து பண்ணையாளர்களுக்கு பயிற்சியும் கொடுக்கிறது

இதைத் தொடர்ந்து நரிக்குடி ஒன்றியத்தில் உள்ள புல்வாய்க்கரை கிராமத்தில் ஒரே இடத்தில 30 கோழிப் பண்ணைகள் ஒவ்வொன்றும் 100 கோழிகள கொண்டதாக அமைத்து சிறு பண்ணையாளர்களின் பொறுப்பில் பராமரிககப்படுகிறது ஒரு ஆண்டு வரை இதன் மூலம் வரும் வருவாயை கூலியாகவோ லாபமாகவோ பெற்றுக் கொள்ளலாம்.

ஓராண்டு முடிந்ததும் அவர்கள் தனியாக கோழிப் பண்ணை வைக்க வங்கி கடன் மற்றும் அரசு மானியத்துடன் உதவிகள்கிடைக்கும்.

இவ்வாறு கே ஆர் ஆர், கல்யாணி பேசினார்.

## வடாற்காட்டில் ஊராட்சிகட்கு தொலைக் காட்சி பெட்டிகள்

வேலூர, மார்ச் 23- அரக்கோணம், நெமிலி காவேரிப்பாக்கம், கே.வி. குப்பம, காட்பாடி வேலூர் அணைக்கட்டு, கணியம்பாடி ஆகியஎட்டு ஊராட்சி ஒன்றியங்களைச் சேர்ந்த 113 ஊராட்சியங்களுக்கு 113 தொலைக் காடசிப் பெட்டிகள் வழங்கப்பட்டுள்ளதாக வடாற்காடு மாவட்ட ஆட்சித் தலைவர் இ எஸ் தானியல்குணாநிதி தெரிவிததுள்ளார்.

# ராமநாதபுரத்தில் பாசனம் செய்ய 50 காற்றாலைகள் அமைப்பு

இராமநாதபுரம், மார்ச் 23— இராமநாதபுரம் மாவட்டத்தில் மின்சார பற்றாக்குறையை நீக்கும் வகையில் காற்றாலைகள் மூலம்நீர்ப்பாசனம் செய்வதற்கான ஓர் முன்னோடித்திட்டம் செயல் படுத்தப்பட்டுள்ளது. இக் காற்றாலை மிகக்குறைந்த விலையில் (ரூபாய் 5000- வதிப்பீட்டில்) தயாரிக்கப் பட்டு கடற்கரை ஓர ஊராட்சி ஒன்றியங்களில் கிடைக்கக்கூடிய காற்றின் விசையை உபயோகப் படுத்தி கிணற்றில் இருந்து நீர் மேலே கொண்டு வரப் பட்டுதொட்டிகளில்தேக்கி வைக்கப்பட்டு தேவையான காலத்திற்கு தேவையான அளவிற்கு பாசனம் செய்து விவசாய நடவக்கைகள் மேற்கொள்ள பேருதவியாக உள்ளன.

முன்மாதிரியாக 50 காற்றாலைகள் இம்மாவட்டத்தில் அமைக்க திட்டமிடப்பட்டு 22 காற்றாலைகள் இதுவரை அமைக்கப்பட்டுள்ளன. மீதமுள்ள 28காற்றாலைகளும் இம்மாத இறுதிக்குள் அமைக்கப்பட்டுவிடும். இவைகள் பெரிய அளவிலான விவசாயப் பெருக்கத் திட்டத்தின் கீழ் செயல்படுத்தப்பட்டுள்ளன இக்காற்றாலைகள் அமைப்பு பணியில் அந்தந்த கிராமத்திலுள்ள இளைஞர்களை ஈடுபடுத்தி, காற்றாலைகள் அமைக்கும்பணியில் பயிற்சி அளிக்கப்பட்டு, அவர்களுக்குத் தேவையான கருவிகளும் 'டிரைசம்' திட்டத்தின்மூலம் வழங்கப்பட்டுள்ளது. முன் மாதிரியாக அமைக்கப்பட்டுள்ள இக் காற்றாலைகள் இயக்கும் விதம், பயன்கள் குறித்தும் விரிவான முறையில் புதிதாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ள ஊராட்சி மற்றும் ஊராட்சி ஒன்றியத் தலைவர்களுக்கு எடுத்துரைக்கப் பட்டு அவர்கள் பகுதிகளிலும் இக்காற்றாலைகள் அமைப்பதற்கான கருத்து துரை செய்யப் என மாவட்ட அ வர் ராஜீவ்வால [illegible] விததுள்ளார்.





Edited and Published by K. RAVINDRAN on behalt of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34' Nelson Manickam Road MADRAS-29,

# சிங்கள ராணுவத்தின் கொடுமை தொடர்வதா?

# படுகொலையை உடனே நிறுத்து

## இலங்கைக்கு ராஜீவ் கண்டிப்பு

**ஆமதாபாத். மார்ச்23- இலங்கைத் தமிழர்களை சிங்கள ராணுவம் கொன்று குவிப்பதை உடனே நிறுத்த வேண்டும் என்று பிரதமர் ராஜீவ்காந்தி குறிப்பிட்டார்.**

ஆமதாபாத்தில் நிருபர்களுக்குப் பேட்டி அளித்த பிரதமர் ராஜீவ் கூறியதாவது:-

இலங்கைத் தமிழர் பிரச்சினையைத்தீர்க்க இந்தியா என்ன செய்ய வேண்டும என்று இலங்கை அரசு எதிர்பார்ககிறது என்பதுதெரியவில்லை.

அந்தப் பிரச்சினையைத் தீர்க்க இலங்கை இரண்டு கட்டமான நடவடிக்கையை எடுக்கிறது. அரசியல் ரீதியாக முயற்சி எடுக்கிற அதேநேரத்தில் ராணுவ ரீதியாகவும் நடவடிககை எடுக்கிறது.

இலங்கைத் தமிழர் பிரச்சினையைத்தீர்க்க இந்தியா புதிய முயற்சி எடுக்கு முன் தமிழர்களை சிங்கள ராணுவம் கொன்று குவிப்பதை உடனே நிறுத்தவேண்டும்.

இவ்வாறு ராஜீவ் காந்தி கூறினார்

### 8 தமிழர் கொலை

இலங்கையில் முல்லைத்தீவில் உள்ள புதுக்குடியிருப்பு என்ற ஊரில் சிங்களராணுவம் தாக்கி 8 தமிழாகள் கொல்லப்பட்டனர்.

ஹெலிகாப்டரில் இருந்து ராணுவத்தினர் துப்பாக்கியால் சுட்ட சம்பவங்கள் அலிப்புரம், பளாலி ஆகிய இடங்களில் நடந்தது.

### ராணுவ செலவு அதிகரிப்பு

இலங்கைத் தமிழரை எதிர்த்து போரிடுவதறகாக இலங்கை அரசு மேலும் 100 கோடி ரூபாயை ராணுவத்துக்கு ஒதுக்கியுள்ளது இத் தகவலை இலங்கைநிதிஅமைச்சர் ரோனிடி மெல் தெரிவித்தார்.

ஹெலிகாப்டாகள் ரோந்து கப்பல்கள் ஆகியவற்றை இலங்கை வாங்குவதற்கு இந்த பணத்தை பயன்படுத்தும்.

வளர்ச்சி திட்டங்களை குறைத்துக் கொண்டு ராணுவத்துக்கு அதிகநிதி ஒதுக்குகிறது இலங்கை.

# உயிர்காக்கும் மருந்துகளுக்கு வரி குறைப்பு

## ஏ.வ.வேலு பாராட்டு

சென்னை, மார்ச் 23— உயிர்காக்கும் மருந்துகளுக்கு புரட்சித்தலைவர் அரசு வரி குறைப்பு செய்துள்ளதை ஏழை எளிய மக்கள்உள்பட அனைத்து பிரிவினரும் பாராட்டுகிறார்கள் என்று சட்ட மேலவையில் கழக உறுப்பினர் ஏ. வ. வேலு பேசினார்.

சட்டப பேரவையில நிதிநிலை அறிக்கை மீதான விவாதத்தின்போது கழக உறுப்பினர் கடலூர் ஏ வ. வேலு பேசியதாவது :-

அன்றாட வாழ்க்கையில மக்களை நோயிலிருந்து பாதுகாத்து காக்கின்ற முக்கியஉயிர்காக்கும் மருந்துப் பொருள்களுக்கு, அவற்றில் 41 இனங்களுக்கு 8 சதவீதம் வரியை 4 சதவீதம் ஆக குறைத்திருப்பது வரவேற்கத்தக்கது அதேநேரத்தில் அரசு பணியாளர்கள் வேலையிலே இருக்கும் போதே இறக்கநேரிட்டால் அவர்களுடைய கடனை முழுமையாக தள்ளுபடி செய்ய வேண்டும் என்ற சலுகை திட்டத்தினைஇந்த நிதி நிலை அறிக்கையில் அறிவிக்கப்பட்டுள்ளது

ஏதோ ஒருசில இடங்களில் உள்ளாட்சித் தேர்தலில் வெற்றி பெற்றுவிட்ட காரணத்தால் சிலர் இன்றைக்கு வெளிச்சம்போட்டு காட்டிக் கொண்டிருக்கிறார்கள் இவர்கள் எல்லாம் அரசாங்கத்தின் நிதியிலே தன்னுடைய பிறந்த நாளை கொண்டாடி அதாவது பிச்சைக்காரர்கள் மறுவாழ்வுத் திட்டம், ஏழைகளுக்கு கண்ணொளி வழங்கும் திட்டம் என்று இப்படி பல்வேறு திட்டங்களை போட்டு தனக்கு விளம்பரம் தேடிக் கொண்டு விழாக்களைகொண்டாடியவர்கள் தான்

ஒன்றியத் தலைவர்கள் நகராட்சித்தலை வர்கள், ஆகிய அத்தனை பேர்களும் உள்ளாட்சி அமைச்சருக்கு கட்டுப்பட்டவர்கள் இதைத்தான் அமைச்சர் காளிமுத்து சொன்னார்.

இவ்வாறு கழக உறுப்பினர் கடலூர் ஏ. வ. வேலு பேசினார்.



# உயிரியல் பூங்காவில் வாகன வசதி: ஆர்எம்வீ. துவக்கினார்

சென்னை, மார்ச் 23— வண்டலூரில் உள்ள அண்ணா உயிரியல் பூங்காவை சுற்றிப் பார்க்க வாகன வசதி ஏற்படுத்தப்பட்டுள்ளது. இதை அமைச்சர் ஆர். எம வீ. துவக்கி வைத்தார்.

சென்னையை அடுத்த வண்டலூரில் மிகப்பெரிய நிலப்பரப்பில் "அறிஞர் அண்ணா உயிரியல் பூங்கா (மிருகக் காட்சி சாலை) அமைக்கப்பட்டுள்ளது

இயற்கையாக காட்டில் இருப்பதுபோலவே அழகிய தோற்றத்துடன் இந்த மிருகக்காட்சிசாலைஅமைக்கப்பட்டுள்ளது.

இந்த மிருக்காட்சி சாலைக்குள் இதுவரை பொதுமக்கள் நடந்து சென்றே மிருகங்களையும் பறவைகளையும் பார்த்து வரவேண்டி இருந்தது.

ஆனால் தற்போது இந்த மிருககாட்சி சாலையை சுற்றி பார்க்க 4 உல்லாச வண்டிகள் விடப்பட்டுள்ளன இந்தியாவிலேயே டெல்லி மிருககாட்சிசாலையிலும். இங்கும்தான் இந்த உல்லாச வண்டிகள் உள்ளன

2½கிலோ மீட்டர் தூரமுள்ள வட்டவடிவு பாதையில் இந்த உல்லாச வண்டிகள் மணிக்கு 5கிலோமீட்டர் வேகத்தில் செல்லும் வண்டிகளில் பிரயாணம் செய்து கொண்டே வன விலங்குகளை பார்த்துரசிக்கலாம்

மிருகங்களுக்கும், பறவைகளுக்கும் இடையூறு ஏற்படாத வண்ணம் இந்தஉல்லாச வண்டிகள் பாட்டரியினால இயங்குகிறது.

வட்டவடிவு பாதையில் 2½ கிலோமீட்டர் தூரத்தை இந்த வண்டி செலல 45 நிமிடம் ஆகிறது.

குழந்தைகள்முதல்பெரியவர் வரை இந்த வண்டியில் ஏறலாம இந்தவண்டிபார்ப்பதற்கு சிறியரெயில் போல தோன்றும் ஆனால். இது ரோட்டில் செல்லக் கூடியது.

ஒரு உல்லாச வண்டியில் 26 பேர் பிரயாணம் செய்யலாம் ஒருவண்டியின் விலை ரூபாய் 1லட்சத்து 54ஆயிரமாகும

பெரியவர்களுக்கு இதில் பயணம் செய்ய டிக்கெட் ரூபாய் 4-ம் குழந்தைகளுக்கு ரூபாய் 2-ம் வசூலிக்கப்படும்.

ஒரு தடவை டிக்கெட் எடுத்தவர்கள் 4 தடவை வெவ்வேறு இடங்களில் இறங்கி மீண்டும் எந்த வண்டியில் வேண்டுமானாலும் ஏறி பிரயாணம்செய்யலாம்.

இந்த உல்லாச வண்டியின் தொடக்கவிழாநேற்று வண்டலூர் மிருகக்காட்சி சாலையில் நடந்தது.

அமைச்சர் ஆர். எம் வீ இந்த உல்லாச வண்டிகளுக்கான "டிக்கெட்டுகளை" முதலில் விற்பனை செய்தார்.

பின்பு உல்லாச வண்டிகளின்இயந்திரத்தைமுடுக்கி விட்டார். பிறகு அவரே ஒரு உல்லாச வண்டியை சிறிது தூரம் ஓட்டிச சென்றார்.

ஆப்பிரிக்காவை சேர்ந்த 3 'பாபூன்' குரங்குகளும் 3 காடிகளும் உள்ள இடத்தைப் பொது மக்கள்பார்வைக்காக அமைச்சர் ஆர். எம். வீ திறந்துவைத்தார்,

குரங்குகளும்; காடிகளும். மலை அடிவாரத்தில் அகழிகள் கொண்ட குகைகளில் தங்க வசதி செய்யப்பட்டுள்ளது.

பொதுமக்கள் நியாயமான விலையில் சிற்றுண்டி சாப்பிடவும், மற்றும தேயிலை வன இலாகா மருந்து பொருட்கள், வாசனை திரவியங்கள் ஆகியவற்றை வாங்கி செல்வதற்கும்வசதியாக தமிழ்நாடுவனத்துறை பணியாளர்களின் கூட்டுறவு விற்பனை கூடத்தைஅமைச்சர் ஆர். எம். வீ திறந்து வைத்தார்.

பிறகு அமைச்சர் ஆர். எம் வீ. நிருபர்களுக்கு பேட்டி அளித்தார்.

நிருபர்கள் கேட்டகேள்விகளும் அதற்கு அமைச்சர் அளித்த பதில்கள் வருமாறு:—

### விசேஷ பஸ் வசதி

கேள்வி:- விடுமுறை நாட்களிலும் பண்டிகை நாட்களிலும், சென்னையில் உள்ள எல்லா பஸ் நிலையங்களில் இருந்தும் மாங்காடு மாரியம்மன் தேவி கருமாரி அம்மன் கோவில்களுக்கு விசேஷபஸ்கள்விடப்படுகின்றன. அதேபோல வண்டலூர் மிருகக்காட்சிசாலைக்கும் பஸ்கள் விடப்படுமா?

பதில்:- தற்போது பாரிமுனையில் இருந்து விடுமுறை நாட்களில் மிருகக்காட்சி சாலைக்கு விசேஷ பஸ்கள் விடப்படுகின்றன எல்லா பஸ் நிலையங்களிலும் இருந்து பஸ் விடுவது பற்றி பரிசீலனை செய்கிறேன்

கே: பொதுவாகசுற்றுலா மற்றும் பொழுதுபோக்கு வசதி கொண்ட இடங்களில் வெள்ளிக்கிழமை வார விடுமுறை விடப்படுகிறது ஆனால் வண்டலூர் மிருகக்காட்சி சாலையில் மட்டும் செவ்வாய கிழமை வார விடுமுறை வழங்கப்படுகிறது இதனால் சுற்றுலா பயணிகள் அதிக சிரமத்திற்கு உள்ளாகிறார்கள். எனவே இங்கும் வாரவிடுமுறை வெள்ளிக்கிழமையாக மாற்றப்படுமா?

ப: இதுபற்றியும் நாங்கள் பரிசீலனை செய்து முடிவு எடுக்கிறோம்.

கே: வெகு தூரத்தில் இருந்து வருபவர்களுக்கு இங்கு வந்துபசியைபோக்க ஓட்டல் வசதியில்லை வண்டலூர் மிருககாட்சியில்ஓட்டல் அமைக்கப்படுமா?

ப: மிருகக்காட்சி சாலையில் அழகு கெடாவண்ணம் மிருகக்காட்சிசாலையின் வெளிப்புறம் ஓட்டலை அமைக்க நடவடிக்கை எடுத்து வருகிறோம்.

கே: மிருகக்காட்சி சாலைக்கு மேற்கொண்டு புதிய மிருகங்கள் வர இருககிறதா?

ப: "யூகோ" நாட்டில் இருந்து "ப்ரவுன் பியர்", 'ஜாதுவார்' 'லாமா' 'மவுன் கோட்' ஆகிய மிருகங்களைக் கொண்டு வர நடவடிக்கை எடுத்து வருகிறோம்.

கேள்வி:- பள்ளிக் கூடங்களில் இருந்து மொத்தமாக வரும் குழந்தைகளுக்கு கட்டண சலுகை வழங்கப்படுமா?

பதில்:- ஏற்கனவே பொதுவாக குழந்தைகளுக்கு குறைந்த கட்டணம்தான் வசூல் செய்து வருகிறோம்

இவ்வாறு ஆர். எம் வீ கூறினார்.

அப்போது சட்ட மன்ற உறுப்பினர்கள் தமிழ்மணி (திருப்போரூர்), கந்தசாமி (பொங்கலூர்), வண்டலூர் மிருகக்காட்சிசாலை இயக்குனர் [illegible] உதவி இயக்குனர் நீலகண்டன் ஆகியோர் உடன் இருந்தனர்.

### நாட் குறிப்பு

**துறைமுகம்**

நாள்: 24.3.86. திங்கள் மாலை 7மணி

இடம்- பிடாரியார் கோவில் தெரு

தலைமை: கே.பாலன்

முன்னிலை:- கு கஜேந்திரபாபு

பேசுவோர்:- திருவை அண்ணாமலை, எம் வி. ராமன், மண்ணடி கிருஷ்ண மூர்த்தி, மா சா. எத்திராசன், எம் எஸ் மணி,என் ஏ, துரை. கே எல்லப்பன் எல்.குமார். எஸ்.கே அமீர் பாட்சா பி விஜயன், ஜெகந்நாதன் அருள் மற்றும் பலர்.

நன்றியுரை:- நிர்மலா கஜேந்திரபாபு

# தி.மு.க. ஆதரவு பெற்ற நகரசபையில் ஊழல்: எஸ் ஆர் ராதாகுற்றசாட்டு

சென்னை. மார்ச் 23- கும்பகோணம் நகரசபையில் ஊழல் இப்போதே தொடங்கி விட்டது என்று சட்ட மேலவையில் கழக உறுப்பினர் எஸ். ஆர். ராதா கூறினார்.

சட்ட மேலவையில் வரவு செலவு திட்டத்தின் மீதான விவாதத்தின் போது கழக உறுப்பினர் எஸ் ஆர். ராதா கூறியதாவது;-

தேர்வில் ஏதோ பெரிய தோல்வி வந்து விட்டது போல் எதிர் கட்சியினா சிலர் பேசுகிறார்கள் நகராட்சிகள் எங்களிடம் இருந்ததில்லை எங்களிடம் இருந்ததை நாங்கள் எதையும் இழக்கவில்லை. எங்களுக்கு இழப்பு ஏற்பட்டு விட்டதுபோல் செய்திகளை போடுகிறார்கள் நடுநிலை என்று தம் பட்டம் அடித்துக் கொள்ளும் பத்திரிகைகள் கூட இப்படி ஒரு தலைபட்சமாக செய்திகளை தவறாக எழுதுகின்றன

கோட்டையில் இருந்து கொண்டு புரட்சித்தலைவர் கணக்குக்கேட்டார் அதைத் தொடர்ந்து கருணாநிதி ஆட்சி அகற்றப்பட்டது கருணாநிதி கோட்டைக்கு வந்து போய்க் கொண்டிருக்கலாமே தவிர ஆட்சியில் அவரால் அமர முடியாது இது மக்களின் தீர்ப்பு.

தி.மு.க. மஸ்ட்டர் ரோல ஊழலைத் தொடர்ந்து சென்னை மாநகராட்சியை அவராலேயே நீக்கச் செய்தோம்.

கட்சியில் இருந்தவாகள் ஊழல் செய்கிறார்கள் என்று நான் சொன்னபோது அவர்களை கருணாநிதி தட்டிக் கொடுத்தார் தவறுக்கு நீங்கள்(தி.மு க) துணை போகிறீர்கள் கொள்ளையர்களுக்கு நீங்கள்பக்கபலமாக இருக்கிறீர்கள்

கும்பகோணம் (தி.மு.க ஆதரவு) நகரசபையில் இப்போதே ஊழல் துவங்கி விட்டது நகராட்சியில் இருக்கும் பெஞ்சுகளைக் கூட இவர்கள்விற்று விடுவார்கள்.

தேர்தல்களில் ஏற்பட்டுள்ள சில தோல்விகள் எங்களுக்கு வெற்றிதான். நகராட்சி மன்றங்களில் கழகத்தினர் கணக்குக் கேட்பார்கள் அதற்கு பதில் சொல்ல முடியாமல் தவிக்கப்போகிறீர்கள்

இவ்வாறு எஸ் ஆர் ராதா பேசினார்

### மானா மதுரை ராஜேந்திரன்

கழக உறுப்பினர் மானாமதுரை ராஜேந்திரன் பேசுகையில் கூறியதாவது:-

குழந்தைகளுக்கான மருந்துகள் [illegible] உயிர் காக்கும்மருந்துகள் அனைத்துக்கும் கழக அரசு வரி குறைப்பு செய்துள்ளது புதிய வரி எதுவும் போடப்படவில்லை.

சத்துணவு திட்டத்தில் முறைகேடுகள் செய்தவர்களை நிரந்தரமாக வேலை நீக்கம் செய்யவேண்டும்.

இராமநாதபுரம்மாவட்டம் வானம்பார்த்த பூமியாகத்தான் இருக்கிறது

பதவியில் இல்லாதகாலத்தில் கூட அந்த மாவட்ட மக்களுக்குபுரட்சித்தலைவர் அவ்வப்போது பல உதவிகளை செய்து வந்தார்.

எங்களுடைய பசும்பொன் முத்துராமலிங்கம் மாவட்டம் வறட்சி மாவட்டமாக அறிவிக்கப்படவேண்டும் இந்த மாவட்டத்தில், கூட்டுறவு நூற்பாலை ஏற்படுத்த வேண்டும் 'சிப்காட்' தொழிற்சாலையைமேலும் வளர்ச்சி செய்ய வேண்டும்

எங்கள் மாவட்டத்தில் கடலோரப் பகுதியில்உள்ள நல்ல தண்ணீர் தீவை சுற்றுலா மையமாக மத்திய அரசு ஏற்றுக்கொண்டுள்ளது. இதுவரை எந்த சீரமைப்புப் பணிகளும் மேற்கொள்ளப்படவில்லை அதை மாநில அரசே ஏற்றுக்கொள்ள வேண்டும்

இவ்வாறு ராஜேந்திரன் பேசினார்.

### எம். எம். சாமி கலை நிகழ்ச்சிகள்

மார்ச்-
24- ராஜபாளையம் ஒன்றியம்
25- சிவகிரி

**முகவரி**

எம். எம் சாமி
77-A காட்டுத்தெரு.
டி. பி மில்ஸ் ரோடு,
ராஜபாளையம் - 626 117
காமராசர் மாவட்டம்

# என். ஜி. ஓ. விளையாட்டு போட்டி

சென்னை,மார் 23— தமிழ்நாடு என் ஜி.ஓ. யூனியன் கட்டிடத்தில் கடந்த 19-ந் தேதி சென்னை மாவட்ட என். ஜி. ஓக்களிடையே நடைபெற்ற விளையாட்டு போட்டியில் வெற்றிபெற்றவர்களுக்குப் பரிசளிப்பு நிகழ்ச்சி நடைபெற்றது மாநிலத் தலைவர் சிவ இளங்கோ தலைமை வகித்தார் மாவட்டச் செயலாளர் தர்மலிங்கம் வரவேற்றுப் பேசினார். அரசு கனி ஆணையர் மற்றும் செயலர் அஞ்சனி தயாளந்த் விளையாட்டுப்போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குப் பரிசுகள் வழங்கினார்

மேலும்,அவர்பேசுகையில் என். ஜி ஓ யூனியன் நல்ல நிர்வாகிகளைக் கொண்டு சிறப்பாகச் செயல்படுவதைப்பாராட்டி [illegible] யான சங்கமாக விளங்[illegible] இச்சங்கத்தின் [illegible] யும் அலுவல[illegible] அரசிடம் [illegible] சலுகைகளு[illegible] தரும் தாய்[illegible] விளங்குவ[illegible] தும் பேசினார்.

## கழகப் பேச்சாளர் ஆஸ்பத்திரியில் அனுமதி

ராஜபாளையம் மார்ச் 23— ராஜபாளையம் மாவட்ட பிரதிநிதியும் கழகப் பேச்சாளருமான ராமச்சந்திரன் உடல்நலக்குறைவு காரணமாகமதுரைராஜாஜி மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டுள்ளார்.

ராதா
அம்மன் கோவில் கிழக்காலே

# புரட்சித்தலைவர் புகழ் பரப்பும் படங்களை எடுப்பதே லட்சியம்

புரட்சித் தலைவர் மீது பற்றும் மாறாத அன்பும் கொண்டவர், கோவைத் தம்பிமதர்லேண்ட்பிக்சர்ஸ் மூலம் தொடர்ந்து வெற்றிப்படங்ளை உருவாக்கி வரும் இவரை அறியாதவர் இருக்க முடியாது,

எளிமையான தோற்றம் மலர்ந்த முகத்துடன் கொங்குதமிழில்பேசிஅனைவரையுப் இன்முகத்துடன் வரவேற்கும் இவருக்கு ரசிகர் மன்றங்களும் நிரம்ப உள்ளன தமிழ் திரையுலக வரலாற்றிவ் தயாரிப்பாளர் ஒருவருக்கு மன்றம் இருப்பது அநேகமாக இவருக்குத் தான் இருக்கும் இத்துணை சிறப்பு வாய்ந்த கோவைத் தம்பியை சந்தித்து அவரது திரையுலக அனுபவம்பற்றி கேட்டதற்கு அவர் கூறியதாவது:-

கே: தாங்கள் சினிமாவுக்கு வந்தது எப்படி?

ப: புரட்சித் தலைவர் நடித்த படங்கள் தான் நான் சினிமாவுக்கு வரக் காரணம். அவர் நடித்த படங்களைப்பார்த்த நான் தி.மு.க விலிருந்த போதே நாடகதுறையில் ஈடுபட்டேன். பின் சினிமாவுக்கு வந்தேன்:

கே: இதுவரை தாங்கள் உருவாக்கிய படங்களில் தங்கள் மனதை தொட்டது எது?

ப: நான் பாடும் பாடல்

கே: உங்கள் படங்களில மோகனையே நாயகனாக போடுகிறீர்களே இதற்கு ஏதேனும் விசேஷ காரணம் உண்டா?

ப:அப்படியெல்லாம் ஒன்றும் இல்லை என்படங்களின் கதை நகரில் பெரும்பாலும் ரொம்ப சாதுவான கேரக்டராக அமைகிறது. அதற்கு மோகன் பொருத்தமாக இருப்பதால் அவரைத் தேர்த்தெடுக்கிறோம

கே: கழகத்தை சேர்ந்த தாங்கள் தங்கள் படங்களில் கழகத்தை சேர்ந்தவர்களுக்கு எந்த அளவிற்கு வாய்ப்பு தருகிறீர்கள்?

ப: என் படங்களில்பணியாற்றக் கூடிய 99 சதவீத தொழில் நுட்ப கலைஞர்கள் கழகத்தைச் சேர்ந்தவர்கள் தான்.

கேள்வி:— மறக்க முடியாத நிகழ்ச்சி எது?

ப.- உயிரே உனக்காக படத்திற்கு லட்சுமிகாந்த் பியாரிலாலை ஒப்பந்தம் செய்தபின் அவரும்நானும் தலைவரை சந்தித்தோம். தலைவர் எங்களை ஆசீர்வதித்தது மறக்க முடியாதது

அதுபோல் நான் பாடும் பாடல்படத்திற்கு இரண்டு கிளைமாக்ஸ் வைத்திருந்தோம் எந்தகிளைமாக்ஸை வைப்பது என்ற குழப்பத்தில் இருந்தபோது இளையராஜா வற்புறுத்தி ஒரு கிளைமாக்ஸை வைக்கச் சொன்னார் அதை வைத்தோம் அதுதான் வெற்றி பெற்றது நாங்கள் நிலைத்து நிற்கவும் அது தான் காரணம்.

கே: தங்கள் லட்சியம் என்ன?

ப: புரட்சித்தலைவர் புகழ் பரப்பும் படங்களை எடுப்பது

கே: கழக கொள்கைகளை பிரச்சாரம் செய்யும் வகையில் படம் எடுப்பீர்களா?

ப: அடுத்த பொதுத்தேர்தலுக்கு முன் கழக கொள்கைகளை பரப்பும் வகையில் இரு பிரச்சார படங்களை எடுக்க உள்ளேன்

கே: உங்களுடையபடங்கள் அனைத்துமே பெரிய வெற்றியைப் பெற்றுவருகின்றன. இருந்தும் ஒரு படத்திற்கு கூட தாங்கள் விழா எடுக்கவில்லையே ஏன்?

ப: எனக்கு மன நிறைவு ஏற்பட வேண்டும். அப்போதுதான் விழா. மன நிறைவு என்பதே தலைவர் பாராட்டவேண்டும் என்பதுதான். அப்போதுதான் விழா.

கே: இந்தத் துறையை தேர்ந்தெடுக்க காரணம் என்ன?

ப: அரசியலுக்கு அடுத்து பொது மக்களோடு பெரிதும் தொடர்பு கொள்ள சினிமாதுறை மூலம் முடியும் என்பதால் இத்துறையை தேர்ந்தெடுத்தேன்

சினிமா துறை பொருளாதார வளர்ச்சிக்கு மட்டுமின்றி பொதுமக்கள் அறிமுக வளர்ச்சிக்கும் பெரிதும் உதவுகிறது. இந்த இரண்டையும் புரட்சிதலைவர் புகழ் பரப்ப பயன் படுத்துவேன்.

இவ்வாறு கோவைதம்பி கூறினார்.

★ தயாரிப்பாளர் கோவைத்தம்பி ★

★★ ரவீந்தர்-ஜெயஸ்ரீ
படம்: விடிஞ்சா கல்யாணம்

## சத்தியராஜ் மீது நளினி காதல்

விபச்சார விடுதியில் ராதா என்ற இளம்பெண் கொலை செய்யப்பட்டாள். விலைமாது என்று அறிந்தும் அவளைத் திருமணம் செய்த ஊமைச்சிற்பி கண்ணன் சூழ்நிலைச் சாட்சியங்களால் குற்றவாளியாகிறான். அவனைக் கைது செய்த இன்ஸ்பெக்டர் சத்யன் அவனிடம்உண்மையான தகவல்களை வரவழைக்க முரட்டுத்தனமாக நடந்துகொள்கிறான். அவனுக்காக வாதாடும் பெண் வக்கீலுக்கும் சத்யனுக்கும் மோதல் ஏற்படுகிறது. வக்கீலின் நடவடிக்கையால் சத்யன்தற்காலிகமாகபதவி நீக்கம் செய்யப்படுகிறான்.

தான் தங்கியிருந்த குவார்ட்டர்சை காலி செய்துவிட்டு சத்யன் சொந்த ஊருக்குப் புறப்படுகிறான். இதையறிந்த வக்கீல் அவனைத்தடுத்துத் தன் பங்களா அவுட் ஹவுஸிற்கு அழைத்து வருகிறாள். தன்கையாலேயே உணவு பரிமாறுகிறாள், "சத்யன் நீங்கள் ஒரு திறமையான நேர்மையான போலீஸ் அதிகாரி உங்கள் பணியை இந்த சமுதாயம் இழந்து விடக்கூடாது. உண்மையான குற்றவாளிகளைப் பிடித்து சட்டத்தின் முன் நிறுத்தும் லட்சியத்தில் நம் இருவருக்கும் வேறுபாடு இல்லை. ஆனால் உங்கள் முன் கோபத்தால் ஒரு நிரபராதி தண்டிக்கப் பட்டு விடக் கூடாது. ராதாவின் கொலைக்குப் பின்னணியில் பல முக்கியப்புள்ளிகள் மறைந்திருக்கிறார்கள் என்று நம்புகிறேன் அந்தக் குற்றவாளிகளை சமூகத்திற்கு அடையாளங் காட்டும் முயற்சியில் உங்கள் முழு ஒத்துழைப்பும்எனக்கு தேவை".என்றார்.

இந்த அழுத்தந்திருத்தமான வார்த்தைகளால் அவள் விடுத்த வேண்டுகோளை அவனால் மறுக்க முடியவில்லை அவளது அன்பான உபசரிப்பும் ஆறுதலான வார்த்தைகளும் அவன் உள்ளத்தைக் கவர பாசம் பிறக்கிறது காதல் மலர்கிறது.

இப்படியொரு உணர்ச்சிமயமான காட்சியை ஸ்ரீசிவஹரி பிலிம்ஸ்' இரவு பூக்கள்' படத்திற்காக ஏ. ஆர். எஸ். கார்டனில் படமாக்கினார் டைரக்டர் ஸ்ரீதர்ராஜன் சத்யனாக சத்யராஜும் பெண வக்கீலாக நளினியும் ஊமைச் சிற்பியாக ரவீந்திரனும் கொலை செய்யப்பட்ட ராதாவாக ஜீவிதாவும் நடித்தனர்.

இளையராஜா இசையமைக்கிறார். சோமேந்து ராய் ஒளிப்பதிவைக் கவனிக்கிறார். வசனத்தை ஏ.எல். நாராயணன் எழுத திரைக்கதை எழுதி இயக்குகிறார் டைரக்டர் ஸ்ரீதர் ராஜன்.

## ராதிகாவிற்காக சிவாஜி செய்த சமையல்

பாண்டியனுக்குத் தன் தங்கை மீனா மீது அளவில்லாத பாசம். தோழியைப் பார்ப்பதற்கு போன தங்கை திரும்பி வந்தால் பசியால் துடிப்பாளே என்று அவனே சமையல் செய்கிறான்.

முன்பின்சமைத்துஅனுபவமில்லாதபாண்டியன் பட்ட சிரமங்கள் கொஞ்சமா? பானையை அடுப்பிலேற்றி கொதிக்கும் நீரில் அரிசியைப் போட்டால் சோறு, பருப்பைப் போட்டால் சாம்பார் என்ற அசட்டுத் தைரியத்தில் சமையலை ஆரம்பிக்கிறார் உப்பான சோறு, உறைப்பான சாம்பாா என சகிக்காத சமையலை செய்து முடித்த பாண்டியன் ருசி பார்த்து விட்டு, "மீனா எப்படி இதைச் சாப்பிடுவாள்"? என்று பயப்படுகிறான்.

திண்ணையில் படுத்திருந்த நோயாளிப்பாட்டியிடம் அவன் யோசனை கேட்க உன் முறைப் பெண் கெளரி இருக்கிறாளே! அவளைச் சமைக்கச் சொல்றது தானே! உனக்கு ஏன் அவஸ்தை? "எனக்கு எவ உதவியும் தேவையில்லை நான் சமைச்சா நளபாகம். வீமபாகமா இருக்கும்" என்று மழுப்புகிறான்

தங்கை மீனாவும் சிறிது நேரத்தில் வந்துவிட்டாள் பாண்டியன் ஒரு இடத்தில் மறைந்து நின்று மீனாசாப்பிடுவதைப் பார்க்கிறான். அவள் ரசித்து ருசித்து சாப்பிடுவதைப் பார்த்து ஆச்சரியத்துடன் அவள் அருகில் போகிறான், தானும் சாப்பிடுகிறான்.

இது என்ன மந்திரமா? மாயமா? இவ்வளவு ருசியாய் இருக்கிறதே? ஆனால் குழம்பும் காய்கறிகளும் மாறியிருப்பதைக் கவனிக்கின்றான். அப்போது ஒரு பெண், 'கெளரி தான் சமைச்சுவச்சதை உங்களுக்கு குடுத்திட்டு உங்க சோத்தைச்சாப்பிடுது.தான் விரும்பினவன் கிடைக்கலேன்னுகண்கலங்கி நிற்கிற பெண்களைப் பார்த்திருக்கிறோம் ஆனா தன் உணர்ச்சிகளைத் தியாகம் பண்ணிட்டு நீங்க பண்ண அந்த சாப்பாட்டைஎப்படி கெளரிசாப்பிடுறாபாருங்க. அவ இந்த வீட்டிலதான் வாழலை ஆனா நெஞ்சுக்குள்ளே பாண்டியன் மனைவியாத்தான் வாழ்ந்துக்கிட்டிருக்கா என்றாள் உப்பும் உறைப்பும் கலந்த உணவைக்கண்ணீர் வழிய சாப்பிட்டுக் கொண்டிருந்தாள் கெளரி.

இப்படியொரு உருக்கமான காட்சி பிரகாஷ் பிக்சர்ஸ் வீரபாண்டியன்படத்திற்காக பாண்டியனாக சிவாஜிகணேசன்மீனாவாக ராதிகா கெளரியாக சுமித்ரா நடிக்க சாரதா ஸ்டுடியோவில் படமாக்கப் பட்டது

## உறவைதேடிய பறவை

ஜெயப்பிரியா பிலிம்ஸ் தயாரிக்கும் 'உன்னிடம் மயங்குகிறேன்' படப்பிடிப்பு ஏற்காடு மலையில் ஏழுநாட்கள் தொடர்ந்து நடந்தது. லேடீஸ்சீட் பகோடா பாயிண்ட், கண்ணாடி மாளிகை. கரடி குகை, படகு குழாம், அண்ணாபூங்கா, முதலிய இடங்களில் நடந்தது. காதல் காட்சிகளும்,பாடல் காட்சிகளும் எடுக்கப் பட்டன.

"காட்டுக்குயிலே கவிதை
பாடி வரவா
கட்டி அணைத்துநிலவைத்
தேடி வரவா
முகம் நிலவோ, இதழ்
மலரோ?"

என்று சுரேஷ் பாட பதிலுக்கு நளினி

கூட்டுப்பறவை உறவைத்
தேடி வா
கொஞ்சி அணைத்து
மயக்கம் கோடி தரவா
இது மலைத்தேன் உனை
அழைத்தேன்"

என்று பாடினார்.

இவர்களுடன் நடனக் குழுவினரும் ஆடினர். புலியூா சரோஜா நடனபயிற்சி செய்தார். சுரேஷ் நளினி சந்திரசேகர், பிரசாத், பபிதா. லூஸ்மோகன் கோபாலகிருஷ்ணன் மற்றும் பலா நடிக்கிறார்கள்.

பாபு ஒளிப்பதிவு செய்ய சந்திரபோஸ் இசையமைக்கிறார். கதை வசனம் எழுதி இயக்குகிறார் காரைக்குடி நாராயணன். 'உன்னிடம் மயங்குகிறேன்' என்ற இப்படத்தை ஜெயலட்சுமி தயாரித்து வருகிறார்.

## மோகினி சபதம்

விட்டலாச்சாரியா படம் என்றால் ஏதோ ராஜா ராணி கதைபோலும் வழக்கம் போல் மாயாஜால காட்சிகளும், தந்திரக்காட்சிகளும் இருக்கும் என்று நினைத்துச் சென்றால் படத்தைப் பார்த்த பின் தான் வரதட்சணை கொடுமையை மையமாக வைத்து உருவாக்கப் பட்டுள்ள படம் என்பது தெரியவந்தது.

வரதட்சணை கொடுமையால் மாமியார் மாமனரால் எரியூட்டப்பட்டஒரு பெண் ஆவியாக வந்து அவர்களை பழிவாங்குவது இப்படத்தின் கதை. நரசிம்மராஜி, அகல்யா, சந்திரிகா, சியாமளா கெளரிஆகியோர் நடித்துள்ளனர்.

பாம்பு முத்தமிடுவது போன்ற காட்சிகள் இடம் பெற்றுள்ளன. குடும்பத்துடன் பார்த்துமகிழவேண்டிய படம் இது.

## காதல் ஒரு தெய்வீகம்

ஏப்ரல் 10 ந்தேதி ;திரைக்கு வரவிக்கும் ;டைக்கண் பார்வையை தயாரித்த ஸ்ரீஹேமமாலினி புரொடக்ஷன் தங்களது இரண்டாவது படமான "காதல்ஒரு தெய்வீகம்" என்ற படத்தை தயாரிக்கிறார்கள்.

ஜெயபால்நாயுடு தயாரிக்கும்இப்படத்தின் கதை, வசனம் அமைத்து இயக்குகிறார்ராஜ்ஸ்ரீதா.

## கலை விருந்து

★★ அனுராதா
படம்: "எதிரி"

## சோறு

'சுமை' சிவப்புமல்லி படவரிசையில் 'சோறு' என்ற புதிய படத்தை இராம.நாராயணன்இயக்குகிறார். ஸ்ரீதேனாண்டாள் பிலிம்ஸ் தயாரிக்கிறது.

ஜீவிதா முற்றிலும் மாறுபட்ட வேடத்தில் நடிக்கிறார். கதாநாயகன் தேர்வு நடைபெறுகிறது. மற்றும் பூர்ணம் விஸ்வநாதன், டெல்லி கணேஷ், தியாகு, செந்தில், குயிலி, சுவர்ணலதா மற்றும் பலர் நடிக்கின்றனர்

ஒளிப்பதிவு என். கே விஸ்வநாதன்

கதை- திரைக்கதை - வசனம்-டைரக்ஷன் இராம நாராயணன்.

தயாரிப்பு என். ராதா.

## தாகம்

வி எம் ஆர். பிக்சர்ஸ் முதல் தயாரிப்பாக 'தாகம்' என்ற படத்தைத் தயாரிக்கிறார்கள்

விரைவில் படப்பிடிப்பு துவங்கவிருக்கும் இப்படத்தில் ஜீவிதா, செந்தாமரை நடிக்கிறார்கள், கதாநாயகன் தேர்வு நடைபெறுகிறது.

இப்படத்தின் இசையை சங்கர் கணேஷ் அமைக்கிறார்கள்.

ஒளிப்பதிவை விஜய் கவனிக்கிறார்.

கிராம சூழ்நிலையில்உருவாகும் இப்படத்தின் கதையை எஸ் வி. முருகப்ப செட்டியார் எழுதியுள்ளார்.

வி. மல்லிகர்ஜுனா தயாரிக்கும் இப்படத்தை பி கிருஷ்ணா டைரக்ட் செய்கிறார்.

## எனக்கென்ன குறைச்சல்?

சுராஜ்மல் வழங்கும் எம்.ஜி.எம்.புரடெக்ஷன்ஸ் தயாரிக்கும் புதிய படமான "எனக்கென்ன குறைச்சல்" ஆரம்பவிழாமிகச்சிறப்பாக நடந்தது.

இப்படத்தின் நடிகர், நடிகை தேர்வு நடைபெறுகிறது இண்டு சக்கரவர்த்தி ஒளிப்பதிவு செய்ய, இசையமைக்கிறார் வி எஸ். நரசிம்மன் ஆர். பாஸ்கர் எடிட் செய்கிறார்,

வி.ராமமூர்த்தி தயாரிக்கும் இப்படத்தை கடைக்கண் பார்வையை இயக்கிய ராஜ் ஸ்ரீதர் திரைக்கதை வசனம் எழுதி இயக்குகிறார்.

## மூன்று வேடங்களில் செந்தில்

சுகு எண்டர் பிரைஸஸ் என்ற புதியபட நிறுவனம் 'வாழ்க தாய்க்குலம்' என்ற படத்தை தயாரிக்கிறது.

கிராமத்து அப்பாவி வாலிபனாகவும், அதட்டி மிரட்டி மாமூல் வாங்கும சண்டியனாகவும், சரசசல்லாப சுந்தரிகளுடன் காதல் லீலாவினோதம் புரியும் காமுகனாகவும் மூன்று வேடங்களில் செந்தில் நடிக்கிறார்.

இசையைகங்கைஅமரனும் ஒளிப்பதிவை பாபுவும் கவனிக்க டைரக்ஷனை கே நட்ராஜ் கவனிக்கிறார். சேலம் டாக்டர் பி. தங்கவேலுவுடன் சேர்ந்து படத்தை தயாரிப்பவர் "காஸ்டியூமர்" கே. சங்கர்

கவுண்டமணி - விஜி
★ ★ படம் "நாலும் தெரிந்தவன்"

## ஜீவிதாவை மணமுடிக்க ராஜீவ் மறுப்பு

வீரம்மாள் மீது ராஜீவ் காதல் கொண்டார். இந்தக் காதல் நாளொரு மேனியும். பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தது.வீரம்மாள் தன்னை மணமுடிக்குமாறு ராஜீவிடம் வற்புறுத்துகிறார் ஆனால் ராஜீவ் இதற்கு மறுத்து விடுகிறார். இதனால் ஆவேசமடைந்த வீரம்மாள் ராஜீவை பழிவாங்கத் திட்டமிடுகிறார் இதற்காக கையில் அரிவாளுடன் ராஜீவை தேடிச் செல்கிறார்.

குளக்கரையில் அமர்ந்திருந்த ராஜீவ் நீரில் வீரம்மாளின் நிழல் தெரியவே படீரென்று அவர் கையைப் பற்றுகிறார்.

தன்னைக் கொல்ல வந்த காரணத்தை கேட்க வீரம்மாளும் தன்னை மணக்க மறுத்த உன்னைக் கொல்வது காதலியை ஏமாற்றும் காதலனுக்கு ஒரு பாடமாக இருக்கவேண்டும் என்பதற்காக இதைச் செய்ய வந்ததாக ஆவேசத்துடன் கூறினார்

ஆவேசமாக நின்ற வீரம்மாளை சாந்தப்படுத்தும் வகையில் பேசிய ராஜீவ் அங்கே பார் எனக் கூறுகிறார். ராஜீவ் வீரம்மாளை என்ன செய்தார் என்பது பதில் சொல்வாள் பத்ரகாளி படம் வந்தால் தெரியும்

வீரம்மாளாக ஜீவிதா நடித்தார்

ஓம்சக்தி ஜெகதீசன்இயக்கி வருகிறார். இப்படத்தில் புகழ்மணி, ஜெய்கமல், சுமதி என்ற மூன்று புது முகங்களும் அறிமுகமாகின்றன.

★★ ரோகிணி-பத்மினி-பாண்டியராஜன்
படம்: "தாய்க்கு ஒரு தாலாட்டு"